உ

சிவமயம்

# கந்நிமாகுமரிப்பகவதி அம்மன்

## பிள்ளைத்தமிழ்

கோட்டாறு

**நீலகண்ட ஆசாரியார் குமாரரும்**

ஸ்ரீமத். நித்தியானந்தஸ்வாமிகள்

மாணாக்கருமாகிய

**கணபதி ஆசாரியாரால்**

இயற்றப்பட்டது.

திருவனந்தபுரம்

"ஸம்ஸ்கிருதபாஸ்கர" பிரஸில்

பதிப்பிக்கப்பட்டது.

1904.





உ

சிவமயம்.

# கந்நிமாகுமரிப் பகவதி அம்மன் பிள்ளைத் தமிழ்.

கோட்டாறு

நீலகண்ட ஆசாரியார் குமாரரும்

ஸ்ரீமத். நித்தியானந்தஸ்வாமிகள்

மாணக்கருமாகிய

கணபதி ஆசாரியாரால்

இயற்றப்பட்டது.



திருவனந்தபுரம்

"ஸம்ஸ்கிருதபாஸ்கர" பிரஸில்

பதிப்பிக்கப்பட்டது.

1904.

## நூலாசிரியர் கருத்து.

மனம்வாக்கிற் கெட்டாத சிற்சத்தியாயிடினும் மன்ப தைகளுய்ய வேண்டிமலையரையன் முதலோரிடத் தவதரித் தொருமடப்பிள்ளைபோல்வளர்தல்கருதி அவ்வவதாரத்தின் கட்பட்ட துதிகவிகளில் முதல்நின்றது பிள்ளைக்கவியாதலா ல் இஃதோர் பெண்பாற் பிள்ளைத்தமிழ் பாடியவாறு,

### பெண்பாற் பிள்ளைக்கவியின் பருவ விவரம்.

1. காப்புப் பருவம்—மூன்றுமாதம் — இஃது பாட்டு டைத்தலைவரை உலகிற் காவற்றொழில்கைக் கொண் டதிருமால்முதலியோரால் காவல் புரிவித்தலாம்.
2. செங்கீரைப் பருவம்—ஐந்தாமாதம்— இஃதுசெவ்விய மழலைச்சொற்களைப்பேசும்பருவம் (கீர்) (சொல்) இப் பருவத்தின் செயல் ஒருகாலைமடக்கி ஒருகாலைநீட்டி இருகைகளையும் நிலத்திலூன்றித் தலைநிமிர்த்து முக மசைய ஆடுதல்..

3. தாலப் பருவம்—ஏழாமாதம்—இஃது தாலாட்டும் பருவம். தாலாட்டு ஓர்வகையாக நாவசையப் பாடும்பாட்டு (தாலு) (நா).

4. சப்பாணிப் பருவம்—ஒன்பதாமாதம்—இஃதுஇருகரங்களையும் ஒருங்குசேர்த்துக் கொட்டும் பருவம்.

5. முத்தப் பருவம்—பத்தாமாதம்—இஃதுமுத்தங்கொள்ளும் பருவம்.

6. வருகைப் பருவம்—பன்னிரண்டாமாதம்—இஃதுவருகையை விரும்பிய பருவம். இதனைவாரானையென்றுங் கூறுவர். ஆனை தொழிற் பெயர்விகுதி.

7. அம்புலிப் பருவம்—பதினாறுமாதம்—இஃதுசந்திரனை விளையாட அழைக்கும் பருவம்.

8. அம்மானைப் பருவம்—இரண்டாம்வருடம்—இஃது அம்மானை ஆடும் பருவம்.

9. நீர்விளையாடற் பருவம்—மூன்றும் வருடம்—இஃது நீர்விளையாட்டுச் செய்யும் பருவம்.

10. ஊசற்பருவம்—நான்காம் வருடம்—இஃதுஊஞ்சலாடும் பருவம்,

இவற்றில் ஆண்பாற் பிள்ளைக் கவியில் கடைமூன்று மொழித்து சிறுபறை சிற்றில் சிறுதேருருட்டல் என்னும் முப்பருவங்கள் உறழ்ந்துவருமாறுணர்க.

---

உ

சிவமயம்,

# கந்நிமாகுமரிப் பகவதி அம்மன்,

## பிள்ளைத்தமிழ்.



### காப்பு விநாயகர் துதி.

பூமேவுகொன்றைச் சடாடவிக் கங்கைநீர்புக்கலைந் துயிர்ம
லமெலாம், போகவென் றுதறியவை யாப்புறும்பாசமெம்
புடையுற்ற தென்று பற்றிக்
காமேவு சத்திசிவம் என்னுமிருதந்தியைக் கடவுமங் குசமு
மேந்திக் கன்மவெங் கோடையற வருண்மதம் பொழியு
மைங் கைக்களிற் றைப்பணிகுவாம்,
மாமேவு கோகனக மென்னவன் னம்பொலி வயற்கந்நி மா
புரிவளர் மாணிக்க வல்லிமர கதவல்லி யபிராம வல்லிகற்
பகவல்லியைத்,
தேமேவு மதுரம் பழுத்தொழுகு மொழியென் சிறுஅர்க
ளவ ருக்குமுதவச் சீர்சால் கடைக்கணிப் பருள்செய்
பூங் கோதையைச் செப்புமென் கவிதழையவே. (க)

நூல்

# முதலாவது காப்புப் பருவம்.

## திருமால்,

செங்கேழ்க் கவுத்துவத் திருமணியு மெழிலா ரணங்குமெ
திரெதிர் மின் செயத், திப்பியவ லம்புரியிடிக்குரல்கு
முறநேமி யூர்கோள் சிறப்ப முகிழாப்,
பங்கேரு கக்கா டலர்ந்தருட் பெருமாரி பாய்ந்துயிர்ப் பயிர்
வளர்க்கும், பணைநெடுங் கொண்டல்வந் தினிதுகா க்கச்
சூற்படாதண்ட கோடிகளெலாம்.
இங்கேப யந்திடும்படிபயந் திடுமிமய மிவளென்று திருவுரு
வெடுத், தென்குணக் குன்றிற் படர்ந்துட் குழைந்தசைந்
தேழ்வகைய ரும்பியெழில்சேர்,
சங்கெறு லிக்க வொண்டிரைவெண்ட ரங்கநற்றரளமெறி
யுவரிதீரத். தண்குமரி நகரில்வே ரூன்றித்த ழைத்தசீர்த
ங்குபைங் கொடிதன்னையே. (க)

## பரமசிவன்.

வேறு.

எவனசர சரமெலாந் தந்திடற் காற்றலான்,
எவனுயிர்செய் வினையெலாம் பண்புறுத் தூட்டுவான்,
எவன்முடிவிலவையெலாந் துன்பறுத் தாற்றுவான்,
எவனுயிர்செய்தொழில்களோயந் தின்புறக் காட்டுவான்,

எவனிலகு சுடர்கண்மூன் றிங்குகண் கூட்டினன்,
எவனெவனும் வடிவமோ ரெண்பெறத் தோற்றினன்,
எவன்விசத சடிலமேற் கங்கையைச் சேர்த்தினன்,
எவன்மலியு மொலிகுலாந் தன்செவித் தோட்டினன்,
அவனலர்க டரினும்விண் வம்பனைப் போக்குவான்,
அவனணிகல் பெறினுமாண் டன்பனைக் கூட்டுவான்,
அவனடிகள் பதுமநா பன்பெறக் காட்டிலான்,
அவனெனது சிரசின்மேற் றன்கழற் சூட்டினன்,
அவனிளைய சசிகுலாஞ் செஞ்சடைக் காட்டினன்,
அவன் விமலசபையுலாந் தந்தனக் கூத்தினன்,
அவனுனது தருணநாந் தஞ்செனச் சாற்றினன்,
அவனடிய ரடிகடாழ்ந் தன்புறப் போற்றுவாம்,
புவனமதில் வினவிநாங் கண்டதைக் கேட்பிரேற்,
புகல்வனிரு படிநெல்பே ணுந்திறத் தாற்செய்தாள்,
புவனையிவ ளறமெணான் கென்பத்த தாட்சியாய்ப்,
புகலிடமுமிஃதெனு மன்பதைக் கேற்பவே,
பொருசுறவ மொடுகராங்கன் றிமுற் றூக்கநீர்ப்,
புரடிரைநொய் தவிடுபோங் கெங்கும்விட் டாற்றல்போற்,
பொடி மணல் கள் சொரியநா ளும்பொலிந் தேற்றமாம்,
புணரிபடுதுறையினூர்ந் தெங்ளுக் காக்கமாய்க்,
குவிகைபெறு நிதியெலாஞ் செங்கையிற் கூட்டுவாள்,
குறுகிவரு பகையெலாஞ் சண்டைவிட் டோட்டுவாள்,
குலமணிகளலைதொறாங் கங்கென த்தோற்றமாண்,
குடபணில தரளமார்ங்குன் றினைத் தேற்றநீள்,

குணநிதியுமயனுமாந் தொண்டிழைத்தேற்றவார்ங்,
குழலினர மகளிர்பான் பண்படுத்தேய்ப்பமாங்,
குயில்களொடு மயில்கள்போரந் தண்பெறக் கூட்டுண்மா,
குமரிநகர் மருவு பூங் கொம்பினைக் காக்கவே. (உ)

## விநாயகக் கடவுள்

### வேறு

அங்கமெட்டுடைப் பிரணவத்தாயிர முகஞ்சேர்
சிங்கங் கைதொழத் தோன்றிய சிந்தூரம் பணிவாந்
தொங்கு காதினூடருண்மதங் கடலெனச் சூழும்
இங்கிதஞ்சிறி தெய்தநங் குமரியா லென்றே. (ந)

## முருகக் கடவுள்

### வேறு

மானும் பிடியும். விளையாடு மலையீரரறு படைத்தானை வடிவேலெறிந்திங் கொருமாய வரைசெந்தூளா, வுடைத் தானைத்.

தேனும்பாலும் பொருமொருசொல் சிவிரவண மடுத்தானைத்திவ்ய ஞானத் தன்னியமெய்ச் செல்விபுகட்டக் குடித்தானை

வானும்புவியு மடிமுடிகள் வயங்காதவனை வயங்கொளியை மயில்வாகனனைக் கவுரியுண்கண் மணியையன்பு செய்குதுமாற்

காணுங்கடலுங் காட்டியரன் களத்திற்கடுவைக் கவர்ந்து முது,கந்நித்தலம்வாழ் மழவிளநங் கந்நிதனைக்காத் தருள வென்றே. (ச)

## பிரமதேவர்

வேறு

பஞ்சகலை யுங்கலையெ னக்கொண்டு விகலையிற் பகிரண்டமு ற்றுமுலவும், பவானியைத் திருஞான வாணியையுயிர்க்க ருட்பாலிதத்ததிரிசூலியை

மஞ்சுதவழ் சோலைப்பசுந்தேன் விரைந்தோடி மகரமும் வி ருந்தயர்க்கும். வளமைபெறு குமரியங் கந்நிப்பிராட்டி தனை வலிதுவந்தருள் புரியுமாற்

கிஞ்சுகச்செஞ்சூட்டு வெள்ளோதி மத்தரசு கிளருநடை வேட்டேந்துறுங். கீர்வாணி சிரகம் பிதஞ்செயச்சாகை கள்கிளத்திச் சகத்திரதளவெண்

கஞ்சமலர் வீற்றிருந் தகிலாண்ட கோடிகள் கணம்படைத் தான் மாங்குரக் கன்மபரிபாகமுற நாடுந்தயாபரன் கட லிற் பெருங்கருணையே. (ரு)

## சிவச்சின்னங்கள்

வேறு

அந்தரர் வந்தார்ச் சனைபுரிவுக்கிசை வந்தணர்முந் தோத் தொலிசெய்முழக்குறழ், அம்பரநன்ருர்த்துணரின் மருக் கமழ் அம்புயமென்பூப் பதயுகளத்தியைச்

சந்திரவிம்போத்தம வதனத் தியைச் சந்தனகும்பார்ச்சுன
சுதனத்தியைச் சந்தவியன்பாப் புகழு மனத்தியைச் சந்
ததமுங்காத் தினிதுபுரக்குமால்
வந்துபணிந் தேத்தினர் சுரர்முப்புர, வன்கண் மொழிந்தார்
த்தலி னருண் மெய்க்கடல், மண்டியெழுந்தார்த் திறலெ
ழிலக்கமும் மந்திரபஞ்சாக் கரமுமுருத்திகழ்
உந்துமரன் கேழ்ச் சொருப வனற் பொலி யும்பொடியுஞ்
சீரத் தெழுகுருவர்க்கமும், ஒண்செயிலிங்கோற், சவமும
தற்கின மும்புனிதஞ்சேர்த்துடனொருமிக்கவே. (சு)

## திருமகள்

வேறு

கொன்பொலி பாரரைவெண் கோடுயர்த்துப்பைங்கொழுந்
துழாய்க்காடு மலரு உக் குரைசெயாள்வார்துதிச்சோலை
குடிகொண்டு சத்துவகுணபிரா று குழியீ இப்,
பொன்பொலியுமாருயிர்க் குக்காப்பெனப்னப்படும் புனிதயா
ருெழுகுமொண்சீர்ப்பூநீலமாமணிக் குன்றினிற்காந்தளம்
பூவிதழுறத்துவண்டு,
மின்பொலிசெழும்பவள வல்லியையிறைஞ்சுதல் விளைந்து
மால் மீனநோக்கின் மின்னனூர்க்கரசிளங்குமரியாய் வெ
ண்மதிய மிருகங்கறிக்கு நாற்று,
நன்பொலிக்குன்ற நிரைசூழுறுங்கன்னிமா நகரத்தினிற்று
ளிர்த்து நம்பற்கி தென்றிரரும்பைச்சுமைந்த வொரு
கொம்பைவந்தளிபுரியவே. (எ)

## நாமகள்

### வேறு

எண்ணுன்கொடெழுநான்குமறைமுடிவு மாகமமுமிசைபாடு
றுமிருகுற வடவிழ்சகத்திரதளவெண்டாமரைப் போதி
னிடை யெழுந்திடு பிரணவம்,
வண்ணுகரக்கருணி கையுமாக நாலாறு வலிதக்கரத்தின்வ
டிவாய் மருவுகாயத்திரி நன்மணியின் மீதானம் பொலிந்
துவாக்கியோபதேசம்.
பண்ணுரவோதிக்கனிந்தசெஞ் சண்டிடைப்படிகத்த கடவு
ட்கிளிப்பாவையை விதிக்கடவுளுவிலுறுகுயிலைப் பழிச்
சுதும் பரமேட்டியொண்,
கண்ணுரமிளிர்மணியை யருண்மணியை முக்கட்கரும்பிற்
கசிந்த தேனைக் கன்னியம்புரிசைசூழ் கன்னியம்பதியில்
வாழ் கன்னியைக்காக்கவென்றே. (அ)

## சத்தமாதர்

### வேறு

நரையனமிவருமணங் கிடபமுற் றூர்த்தவள்
நளிமயிலில் வருநுணங் கிடைக்கத் தேற்றவள்,
இரையுமட லரியுவுந் தலம்வலத் தாற்றினள்
இபநடைகொள் பவள்கழுங் கதிர்முள்கைக்காப்பினள்,
புரையிலிவ ரெழுவர்தம் பதமுளத் தேற்றதும்
பொலன்மணிக ளலைகரங் கொடுமிகத்தூற்றிடும்,
குரைகடலினணிதுசெங் கனகமுற்றுக்கிய
குமரிநகர் மருவுநன் குமரியைக் காக்கவே. (௯)

## பலதேவர்

வேறு

வயிரவரெண்மர் மருத்துவரெண்மர் பசுக்களுமெண்மர் திசை, வானவரெண்மர் நிசாசரர்சூரியர் மாழை, புருத்திரரும்,
தயிரிய வீரனிலக்கரொடெண்மர்கள் சரபவுருப்பெரியோன் சசிகணவன்பல தேவரும் வந்தருள் சந்ததமும் புரிவார்,
கயிரவமாமலருடினரும்பர் கொண் முல்லைக்காடு வழி இக் காமக்கொடிபடர் வா மப்புயனிரு காதுற்றிடு மழலைக்,
குயிலினை மரகதமயிலினை மிகுகுரல் குளிறுங்கோட்டதொடுகோகனகத்துரு மாகனகத்தணி குமரிக்கொடிதனையே.

காப்புப்பருவ முற்றிற்று.



இரண்டாவது.

## செங்கீரைப்பருவம்

வேறு

மூவரைப்பெற்றுல் வயிற்றினிடை மூவரையு முடையை மூவுலகுபணிய, மூடுமிமயாசலத் தரையன்மகளாய்ப்பொன்செய் முளரியிலுதித்த ஞான்றில்,
மாவரையதேவிகங்கைக் கொண்மை செய்துழி மயிர்க்குச் செறிந்துயிரெலாம் மருவுதிமிரங்கண்டரற்றினுற் போலு மாழாந்திடலுமன்னைமாதர்,

பாவரை விழிக்கடவு ளொளிமழுக்குங்கிலப் பொட்டிட்டு
ஞானதீபம் நன்கிதென்றுலகத்தி சூழ்ந்து தந்தச்செப்பி
னழுவினுங்கமுதமுதவச்,
சேவரை நினைந்தின்ப முண்டுவளர் பைங்குழவி செங்கீரை
யாடியருளே, தென்குமரிநகரில் வாழென்குமரியம்மை
நீ செங்கீரை யாடியருளே. (௰௧)

கற்றைவெண்டிங்களங்கோவைபோ னிலவுமிழ் கழுத்தின்
முத்தாரமாடக் கார்கோளி னூர்ந்துமதி கவ்வுமாடரவ
னைய கதிர்மணிச்சுடிகையாட,
ஒற்றை வெம்பருதிவடமாகியிள வெயில்காலும் ஒள்ளரை
வடங்களாட உசனருக்கிணைசெய்வச் சிரத்தொடிகளாட
மெய்யொளிர்டசுங்கதிர்களாட,
மற்றைநாற் கோள்வனைந் தாங்கு சித்ரப்பணிகொள் மறை
வெஞ்சிலம் பாடிட வனசனுடைத் தேவர்குரிசிலாடச் சே
டன் மடிதுயின்முகுந்தனுடைச்,
சிற்றையென் றகிலாண்டர் கொடாண்டு பைங்குழவிசெங்கீ
ரையாடியருளே தென்குமரிநகரில்வா ழென்குமரியம்
மை நீ செங்கீரை யாடியருளே. (௧௨)

குலகிரிக னெட்டுமாகத் தூணம் வான்முகடுகோயின்மேற்
பந்தராகக் கோள்களொடு நாளெலாம் பிச்சமாய்க் கோ
ண்மூக் குழாமாய் விளிம்புப்படாம்.
இலகுநான் மறையுநால் வடமாகநாதாந்த தத்துவத்தொட்
டிலேறி இரவுபகல் லாவிடத்திற் சிவானந்த நித்திரையி
னைசந்தபோதும்.

அலகில் கோடாகோடி சத்தியாய்நின்றுகன் மானுசாரத்தை
நாடி அகர்த்தத்துவாதிப்பிர புத்துவசாமர்த்தியகுணி அ
ணிபெறுந்திருமுகத்திற்.

றிலகமென விளையாடு பச்சிளம்பெண்பிள்ளைசெங் கீரையா
டியருளே தென்குமரிநகரில்வா ழென்குமரியம்மை நீ
செங்கீரை யாடியருளே. (கங)

நான்மணக்கும் பூவிலன்றிமுகிள் படியுமோ நாகிளம் பிரம
ரமெனநம்ப னேதும்போதுநீகோட்டு முகமலால்கவினு
மோசிலீமுகத்தைப்.

பான்மணக்குந்தேன் வழிந்தோடுகுமுதமலர் பகருமறை வ
ல்லிமேனை பங்கயக் கொங்கைநீ உண்டபாவனையுமைஞ்ச
த்தியாம் பாவனை கொலோ.

கான்மணக்குஞ்சுண்ணமெம் பிரான் கொன்றை புனைமார்பி
ற்கமழ்ந்திடாதோ கடிமணக்கப்பெண்டிர் பொடிமணக்க
ச்சென்று கால்கொடோமுழுகிமீனச்

சேன்மணக்கும் பொருநை ஒண்டுறைவர் அரசி நீ செங்கீ
ரை ஆடியருளே
தென்குமரிநகரில் வாழென்குமரியம்மைநீ செங்கீரை
ஆடியருளே. (கச)

வேறு

கடிகமழிருதய முளரியில்விரகளி கானவினம் பாடக்
கணபணமுடிபுனை நிலமகள் வயின்வினை காரணமென்றுய

ழுடிவறுமுயிர்களை தமதகமுறுவித்தி மூதொளிகண்டேய
முனிவரர் மவுனமுளவிர்மதி பிதிரொளி மூலமெலிந்தாட
நடிவித்துவெனுமிளிர்குருகொருபதமொடு நாதவிதங்கூவ
நனவலதுறுசக கனவுமுதுதுயிலு நாளுமிரிந்தேக
அடியவர் மலவிருள் விடியவுதயகதிர் ஆடுகசெங்கீரை
அழகியகுமரியில்வளர்களியிளமயில் ஆடுகசெங்கீரை (௰௫)

மஞ்சளை யிஞ்சியை அங்குகடந்து வளர்ந்தேகும்பாகு
மஞ்சளையிஞ்சியை அங்குகடந்து வளைந்தேகும்பாகு
குஞ்சர மங்கையிலங்கு கரும்புகள் கொண்டாடுங் கானம்
குஞ்சர மங்கையிலங்கு கரும்புகழ் கொண்டாடுங் கானம்
பஞ்சரமென்படு முன்சரணென்று பணிந்தார் மென்பூவோர்
பஞ்சரமென்படுமுன்சரணென்றுபணிந்தார்மென்பூவோர்
செஞ்சொலரும்பிய இன்றனையமங்களை செங்கோ செங்கீ
ரைதென்கனிபம்பதி தங்கியமின்கொடி செங்கோசெங்
கீரை (௰௬)

சங்கரரின்ப நடஞ்செயல்கண்டு தனந்தாவென்பாய்நீ சந்த
மிகுந்தமிழின்சுவைகண்டு தனந்தாவென்போமியாம்
செங்கரபங்கயம் இங்கணுயர்ந்தனை திண்போகந்தாராய் செ
ஞ்சொன் மொழிந்தனை யெங்குறை நைந்ததுசிருங்காரந்
தாராய்
இங்கிருலிங்கமிசைந்திடு முன்றனை எந்தாயென்போமால் எ
ங்களையுங்களில் அன்றியு ணர்ந்தனிர் எந்தாயென்பாயா
ல்த்

தெங்குநெருங்கிய வஞ்சியர் மஞ்சுளை செங்கோ செங்கீரை
தென்கனியம்பதி தங்கியபின் கொடி செங்கோ செங்கீ
ரை. (கஎ)

வேறு

பரமப்பெரியவன் அருமைத்திருவருள் பங்காய் நின்றாயைப்
பகவற்குணிதனையவனிற் பிறிதெனல்பண்டார் கண்டா
ர்சொல்

பிரமப்பெயரவன் முதல்வர்க்குறு தொழில் பின்றாய்தந்தா
யேபிணையொப்பெனில்விழி தவர்கைப்படுமது பின்சாய்
கின்றாமோ

உரமத்தியிலொரு கரம்வைத்தனரவ ருன்பாறங்கா நாள்
உனையொர்ப்பவருனை அலதெப்பொழுதினும் உண்டோர
ங்காய்நஞ்

சிரமத்தினிலுத விடுசற்குணநிதி செங்கோசெங்கீரை திமிர
ப்பகைவதி குமரிப்பகவதி செங்கோ செங்கீரை. (கஅ)

பொற்குட மெத்தனைமட்குடமத்தனைபோலும்போலாவாற்
பொற்றாமரை முகிள் முற்றுமுகிலை முகிட் பொலிவு நின்
னெழினகரிற்

எற்குடறந்தனை நின்னிருபாதம் இறைஞ்சித் தொழுவேனல்
இவ்வாறரிபிர மாதியர்கட்கும் இலங்குரு வீய்ந்தனையே

முற்குட நாடணியற்று தவத்தான் முந்நீர்த் துறை பேணி
முழுதும் பழமறை தொழுதிங்கிதமொழி மொழிய வுவந்
தனையே

சிற்குண முநிவர்கள் முற்கிளர்பெருநிதிசெங்கோ செங்கீரை
திமிரப்பகைவதி குமரிப்பகவதிசெங்கோ செங்கீரை (கக)

தனுமுற்படுபொருள் உயிருக்கிவ ளானிதந்தாய்செங்கீரை
தனயற்கொருகுரு வெனவிப்புவிவரு தஞ்சேசெங்கீரை
மனுவுக்கிருதய மலர்புக்கறிவெனும் வண்டேசெங்கீரை
வனசத்திருவரு டியபொற் பதமலர் மங்காய்செங்கீரை
அனுவுக்கணுவென வணுவுற்றுறைபவர் அன்பேசெங்கீரை
அனைவர்க்கனையென வருபெட்புருவறம் அம்பாசெங்கீரை
சனப்பகைதெறுமவர்கைப்புகுமசி செங்கோ செங்கீரை
திமிரப்பகைவதி குமரிப்பகவதி செங்கோ செங்கீரை. ()

செங்கீரைப் பருவமுற்றிற்று.

———0———

மூன்றாவது

## தாற்பவரும்

வேறு

சமஞ்சூழ் முடியர் உளநிலத்தில் விதைத்தன் பருணீர்காலியா
த்துச் சாத்துவிகாங் குரந்துளிர்த்து நாமுய்நின்றுசம்புப
ட்சம்
இமஞ்சூழ் முய்யர் திரிபென்னுங்களைகட்டறிவே இருஞ்சினை
யாய் இயமமுதலாங் கதிர்வாங்கித் தலைப்பழமுன் னிரு
ஞ்சைவம்

சிமஞ்சூழ்மூல மலக்கோடை தீய்ப்பக்கண்டோர் காமினிமே
ற் செய்வதென்னென்றனுக்கிரகந் தேடும் போழ்தின்ன
ருள்சுரந்து
கமஞ்சூற் கொண்டு தாரைபொழி கருவிமுகிலேதாலேலோ
கருணைமுதிர்ந்துந் ததிமுதிராக் கன்னிக்கனியே தாலே
லோ (உக)

நிலவும்பிறைசூ டியையவேண்ட நீடுஞ்சினைக்கோ ழிணர்த்தீ
ந்தேன் பிரப்புந்தடச் சேதாம்புயத்தில் எகினமிருப்பநி
றைமதுவுண்
டுலவுங்குருகர் இசைபாட உகைப்பமுழவே றரியினங்கள்
ஒருங்கே வீறுரவமுரலக் கருங்கட்டோகை நடமுஞ
ற்றும்
பலவும் வளங்கண்டமையாமற் பலாரி இமையாவிழிவிழித்து
ப்பார்த்தாங்கடைக்கே ழலர்மலர்ந்து பராரைமரங்கள் ப
ரந்து நறை
குலவும் பொழில்சூழ்கன்னிநகர்க் குயிலே தாலோதாலே
லோ கோமளஞ்சே ரெழிற்குமரிக் கொடியே தாலோ
தாலேலோ. (உஉ)

செக்கர்மேனி விசையைதிரு வூஞ்சலாடத் தேர்விசயன் இ
கழ்காண்டீபமுமுகுந்தன் சிலையும்பொருவாச் சிலைகுனித்
திட்
டக்கிரோமந்தனையிலக்கிட் டரசவிளங் கோளரிகள்குழீ இ
அசையாதுருண்ட ஞாணேற்றி யரிச்சுண்டனையகிள்ளூகி
ராற்

ஞெருக்கிபுதறி விசித்து விசித்தொலிக்குஞ்சுராரோகணங்கே
ளா அத்தும்புராதி கின்னரர்கள் சூழுங்கழகந் தொறு
தொறும் போய்க்

கொக்கின் மௌனசாதனஞ்செய் குமரிப்பதியோய்தாலே
லோ கோமளஞ்சேர் எழிற்குமரிக் கொடியேதாலே தா
லேலோ (உ௩)

கணங்காலின் ஆண்வமால் உகளவுமரும்பெறற் காமரிளவஞ்
சியன்னார் கண்ணிழலை மீனென்றுவெண் குருகர்கொத்த
வுங்கண்டுமுட்கண் ணிலாரோ

கிணங்காறைச்சுவடு தோயுமாருடினர் நீணெறிக்குமரரெ
ன்று நிறைநீர்த்தடாகத்தினின்று வெள்ளியசோதி நெடு
வானைதுள்ளிவான் போய்

உணங்காதுமே கந்துளைத்தமுத மோடிழிந் தொழியாதக
ண்கழுதவ ஒத்துளேன்குணதிசைக் கடவுளோடியானு
மென்றுறவுமெதிர் நீரிறைக்குக்

குணங்காலு முதுகன்னிநகர்வீற்றிருந்தபூங் கொம்பே தா
லே தாலேலோ கோமளஞ்சேர் எழிற்குமரிக் கொடியே
தாலேதாலேலோ (உச)

வேறு

மந்திரகோடிகள் ஒன்றுதிரண்டுரு வந்தனைநீமாதே வந்த
னை உன்றனை அன்றிவிரும்பிய மந்திரம் வாழாவே
சிந்தையின் உளடுனதங்கமுணர்ந்தவர் தென்றிசைசேராரே
செந்திரு நாமகள் என்றிரு மாதர்தினம்புடைபோரே

ஐந்தொழி லாளர் முனந்துதி செய்துணை அன்றுலகாள்வா
ரோ அண்டசராசரமுந்துறைகந்நியரும்பதியாமாபோற்
சந்ததமேவுபரஞ்சுடர்மின் கொடி தாலோ தாலேலோ சந்தி
ரசூடர்விழைந்த பசுங்கிளி தாலோ தாலேலோ. (௨௫)

கஞ்சனும் உன்பத கஞ்சமடைந்தி லன்நீண்முடிகாணுனுங்
காலன் நெடுந்தலை மீதிருகாலுமுணர்ந்திலன் மாயோனும்
நஞ்சயில் கண்டனை உன்னொரு பங்கில் உணர்ந்தினர் நல்
லோர்தாம் நந்துமுளங்கிய தென்குமரிப்பதி நாடுபு நா
டோறும்
அஞ்சலெனும்படி எங்கணு வந்தருள் ஆயினைகோமாதே அ
ன்பு நிரந்தரம் நின்கணிறந்தனம் அம்புயவண்டேபோற்
றஞ்சென வந்தவர் உஞ்சுகுமாரியை தாலோ தாலேலோ
சந்திரசூடர்விழைந்தபசுங்கிளிதாலோ தாலேலோ.(௨௬)

விண்டொடர் பூத வனஞ்செல இளஞ்சிகி மீதா ஏடோரா
வெங்கத மேகொடும் அங்ககலாதுற மீவாய் சூழ்நாகம்
ஒண்டொடியார்நிழல் சென்றுபதுங்கவும் உளடெபோர்வே
ழம் ஒன்றுடன் ஒன்று நெருங்கிவிழிப் பொறி ஓயாதே
சோரக்
கண்டுடன் உற்கையை அஞ்சுமெனிற்கடை கண்டார் வேறு
ரோ கந்திரு வாதியர் வந்துவணங்கிய கந்நிநின் மூதூரிற்
றண்டளிர் மாவலர் இன்குரல் ஒண்குயில் தாலோ தாலே
லோ சந்திசூடர் விழைந்த பசுங்கிளி தாலோ தாலேலோ

எண்ணைந் தொடுமுக் கோணுறழ் கிரகம் இருந்தாய் தாலே
லோ இன்னஞ்சிறுபெண் ஆபுலகினும் இளந்தாய் தாலே
லோ
கண்ணன் புகழ்மகி டாசுரவாதுகடந்தாய் தாலேலோ கன
காசலதூ வித்தேர்மீதுக லந்தாய் தாலேலோ
பண்ணாந்தாமறை ஊடுகி யாதிபரந்தாய் தாலேலோ பந்தந்தீ
ர்வகை இங்கொருவாய்மை பகர்ந்தாய் தாலேலோ
தண்ணாந்தாமரைசூழுறுகந்தி தழைந்தாய் தாலேலோ தார
ணிபணிநாரணியெனவருதாரணியே தாலேலோ. (உஅ)

வித்துருமத்தூண்மிசைச் சந்திரகாந்தத்தில் வெண்ணிறத்
தகடுவேய்ந்த மேலிலிற்குலிசத்த சுவர்தொறாஉந்தற் சா
பைமேவரனுமின்னனார் தாஞ்
சத்துருவெனக்கருவும் ஊடல் முன்னிலை யவர்தலைக் கொ
ண்டகாமவெறிநஞ் சகசமலம் இவையலாற் சாதுரியம்
இலையென்று சான்றோருணர்த்துமாடக்
கொத்துரு அணிந்தயிர்த சாகர நனந்தலை குறித்தரெத்ந
தீவு போற் குலமணியின் இளவெயில் எறிக்கும் மணி
முரசு குமுறுபேரோதைஎல்லாம்
கத்துருமுழக்கு குமரிப்பதியில் வளர்தருங்கனியே தாலோ
தாலேலோ காலமூன்றுங் கடந்தசிவ காமி தாலோ தா
லேலோ (உக)

கண்ணன் உருப்பத்துந்தரு விரலொண் கைய்யாய் தாலே
லோ காமனொடிரதியை உதவுசெவ் வரிபிறழ் கண்ணாய்
தாலேலோ

மண்ணியவிடமமுதாகுறுகுமுதநல் வாயாய் தாலேலோ மாணிடமேந்தியகுரலிசையாக்கியவாக்காய்தாலேலோ
விண்ணியல் பருதிக்கொளிதரு மவிரொளிமெய்யாய் தாலேலோ வீரியம்வேண்டினர் போற்று றுசீரடி விமலாய் தாலேலோ
தண்ணியகுமரியையினைபவரிதயா சனையேதாலேலோ தாரணிபணிநாரணியெனவருதாரணியே தாலேலோ. (௩௰)

தாலப்பருவமுற்றிற்று.

---

நாலாவது

## சப்பாணிப்பருவம்

வேறு

ஆண்மைகிடந்து சிறந்துள புருடோத்தமனிவளெனலுமறந்தவசமதாகிவலிந்து தொடர்ந்தனுராகமுறழ்ந்தனனால்
வாண்மைகிடந்த விழிக்கடைதூங்கியகாமலைப்படியீ இமாதரை எண்வகையாலு மயர்த்திருவாழ்வையும் வேண்டகிலா
ஏண்மைகிடந்த தபோதனர் போதமிருந்த ஒருத்தனகோ என்னதுகலைபொன் றெய்தியமோகினியின் பால்மனவலியின்

தாண்மைகிடந்ததுகாண்மெனவொப்பிய சப்பாணிகொட்டி
யருளே சலதடமருவுமுது குமரிநகர்வளருமயில் சப்பா
ணி கொட்டி அருளே. (கக)

அண்டத்தின் அண்டமெழுதண்டகோடிகளுமங்காருயிர்த்தொ
கைகண்முழுதும் அம்புயாசனன்முதற் றேவர்முனி வர
ரெலாமடிமுடி மறிந்துகீழாய்
எண்டரும்பொருள்கள்வே றவைகளொடு நிர்த்தூளி இடு
மவன்சத்திநாமால் இங்குநம்மோடுமெற் றீடுபாராட் டு
வோர் எவருமிலை என்றென்றுடோன்
றெண்டொடிபுலம்புறக் கைதாக்குமாறுபோல் உகாந்தத்
தின் உருமேறொலி உம்பர்க்கணன்றிம்பர் காட்டுகேனி
யானென் றுரைத்திட்டதைறந்தொதாக்கும்
சண்டப்பிரசண்ட உத்தண்டதைக் கொட்டிஓது சப்பாணி
கொட்டியருளே சலசதடமருவுமுது குமரிநகர் வளரும
யில் சப்பாணி கொட்டி அருளே. (கஉ)

பெருவெட்ட வெளியெனுந் திருமுற்றமதனிற் பிருந்தாவ
னதாவனத்தமர்ந்த பெம்மான்மடந்தையொடு நாமகளு
நின்னேவல் பேணிப் பெயர்ந்துநிற்க
ஒருவட்டகிரிவேலிகோலிமேல் விரிபுவனம் ஒள்ளறை கு
றித்தேழ்வகை உடல்கொள் எண்பது நான்கிலக்க பே
தப்பாவை உள்ளுறஇழைத்த சிற்றில்
மருவட்ட மூர்த்திவந்தூடழித்திதுவேமயானமென்றடியா
டி மாறித்திரும்புமுன் பழயபடிசிட்டித்திவ்வண்ணமுடன்
உடனுடல்செய்

தருவட்டமுகி எங்குன் ஆடுகவென்றனைபோல்வ சப்பாணி
கொட்டியருளே சலசதடமருவுமுதுகுமரிநகர் வளரும
யில் சப்பாணிகொட்டியருளே. (௩௩)

இடமருவு பாகரோடரிபிரமர் முதலினோர் எதிர்பார்த்தி
ருந்தபோதும் ஏழைபங்கோடிவந்தருள்புரியும் என்னம்
மை என்னம்மை என்னம்மைநீ
மடமுதவுமாணவ மறைப்பினோர்க்கின்னருள் வழங்காதிரு
த்திகண்டாய் மற்றுன்னை அன்றியே சிற்சத்தி என்றினி
வருக்க வொருசத்தி உண்டோ
தடமருவு சைவத்தினுக்குவேறாகவொரு சமயமுண்டென்
றுசில்லோர் சாதிப்பதென்னனக் கைகொட்டுமாறு போ
ற்றண்டளிரிளங்கரத்தாற்
குடமருவுமுலையம்மைநீ யின்னம் ஒருதரங்கொட்டியருள்
சப்பாணியே குரைகடலின் அலைமோதுகரைமருவுமுது
வாழ்வு கொட்டியருள்சப்பாணியே. (௩௪)

வேறு

எண்ணறுசூரியர் எண்ணறுசந்திரர் எதிர்பட்டுதயஞ்செய்
திலகுவதாமென வைகடிகம்புனை இளவெயில் மணிவீசும்
வண்ணவியன்பொற்றாவிகள் புனைவன மரகதநெடுமாடம் ம
ங்கையர் அங்கைப்பந்தினும் இழிவனவகைநித்திலமென்ப
கண்ணகன் ஞாலத்தரதனபுரநிகர் கந்நிப்பதிமாதோ கடவு
ட்சிந்தாமணிவலயம்போற் காமர்தழீஇயின் கட்

தொண்ணூறுமாமலர் கொட்டுவதென்நனி கொட்டுகசப்பாணி குற்றமில்நற்றவர் பற்றுறும் உத்தமி கொட்டுக சப்பாணி. (௩௫)

எட்டுள திசையினும் எட்டுகைவாணன் திதயம்பறைகொட்ட ஈரைஞ்ஞூறுகை வாணனெடுங்குட முழவினின் இசைகொட்டக்
மட்டுளர் அல்லவர் ஆகியவானவர் முனிவரர் மகிழ்கொட்ட வாளவுணேசர் அரக்கரகத்தில்வளர்ந்தெரிமலர் கொட்டத்
தொட்டமலர்க்கணை அட்டியவோநெறி சுட்டெழுதழலென்னே சுத்தாவிற்பினென்முத்தணிநகையொளிசொட்டுறுமாறங்கை
கொட்டுவதென்மறைகொட்டிட ஒருமுறைகொட்டுக சப்பாணி குற்றமில் நற்றவர் பற்றறும் உத்தமி கொட்டுக சப்பாணி. (௩௬)

அன்புகனிந்துள ராயசெழுந்தரு அணவிச்சிறிதமரூஉ அங்கணருளெனுமாணிக்கப் பஞ்சரம் அதிலடையூஉ
இன்புகனிந்த சிவானந்தப்பால் உண்டுதெவிட்டெழியூஉ என்றுந்தாரகமாகிய பொருளுரை இசைகெழு சிறுகிள்ளாய்
மன்பதை மாமயில் அகவக் கருணைபொழிந்தருள்வண்காரே வானவர் மகுடப்பந்திகடோறும் வயங்குசிகாமணியே
கொன்பொலியும்பல சத்திகளரசே கொட்டுகசப்பாணி குமரியெனக்குமரியினிலுறைந்தவள்கொட்டுகசப்பாணி.௩௭

மந்தாரத்துடன் மௌவ்வல் செவந்திநல்மல்லிகை ஆதிய
வாம் மலர்படி ஸ்ரீமிறுசுரும்பொடு தேனிவைமாறற்கோ
ச்சினை கொல்
எந்தாயூழிநடம்பியிலீமத் திந்திரன் ஆதியர்மெய் எம்மானு
தல்விழி எரிபடும் அடலை இரிந்திட எற்றினைகொல்
சந்தாபந்தணி என்குருநருக்கருள் தந்தாம்முந்தெனவே தந்
தாம் என்றுகை கொட்டினை கொல்லென அறிஞோர்
சாற்றினராற்.
கொந்தார் தளிர்புரைமின்கைத்துணர் கொடுகொட்டுகசப்பா
ணி குமரியெனக் குமரியினிலுறைந்தவள் கொட்டுக
சப்பாணி. (நஅ)

(வேறு சந்தம்.)

அக்கம் மிகுப்பானும் ஒக்கவிதிப்பானும் அற்புதம் உற்றார்
கொலாம் அட்டதிசைப்பாலர் சுற்றவிவட்பேர் கொளும்
அப்பதிவிட்டேகலார்
மைக்கடலிற்றூழும் வைப்பைமருப்பார வைத்த சுறப்பேற
னும் மற்றிவள் சற்றீயக் கொற்றமொடுற்சாகம் மட்டல
பெற்றானகோ
செக்கர்நிறத்தாகித் தக்கனைஅட்டோனுஞ் சிற்றடல்கொட்
சீரியன் செப்புமினித் தேவர் முப்பதுமுக்கோடி செய்ப்
படுகுற்றேவலார்
கொக்குமுறித்தானும் அத்திதறித்தானுங்குக்கிபொறுத்தா
ரெனுக் கொற்றவிதப்பாணி சுற்றும் அதிர்ப்பாணீ கொ
ட்டுக சப்பாணியே. (நகூ)

(வேறு சந்தம்.)

மந்தரமாமலை ஒன்ற உலாவரு மத்தகெஜப்பாணி
 வண்டுளர் சோலையிருந்தலைநேரேழு மற்றனுசப்பாணி
சந்தன வாவிகுடைந்தரமாதர்க ணற்சல சப்பாணி
 தங்குபுவோரொரு பொன்புரையாவிசை தந்தரசப்பாணி
அந்தரமேவுவி கங்கமெலாம்வர வைக்கரசப்பாணி
 அம்பிகைபோல்வகைஎம்பெருமானொடுகைச்சரசப்பாணி
கொந்தளபாரமடந்தையர்நாயகி கொட்டுசப்பாணி
 கும்பசனுதிபரும் பணிநாரணி கொட்டுக சப்பாணி. (சய)

சப்பாணிபபருவம் முற்றுற்று.

———0———

## ஐந்தாவது முத்தப் பருவம்

வேறு

பனிவந்தடைய உடையுமலர்ப் பதுமாசனத்துப்பண்ணவற்
 கும் புரந்தாமனுக்கும் அரியபதாம் புயத்தாய்மடப்பைங்
 கிளிப்பிள்ளாய்
தனிவெண்டிங்கட் புரிசடையிற் றழைக்குமொருசக்கிழத்தி
 வந்து தாழ மகிழ்ந்து சிவன்மார்பிற் றழும்பு படுக்குந்த
 னயுகளாய்
தொனிநந்தெறியும் விரிதரங்கத் துறையும் வேலாவனமு

றையுஞ் சூழலினும் போய் வதிவலெனத் துறக்கந்தனை
யுந்துறக்குமுது
முனிவர்வதியுங் குமரிநகர் முதலேமுத்தந் தருகவேமுளரித்
தடத்தில் மிளிர்தளவ முலையாய் முத்தந்தருகவே. (௩க)

ஈசானந்தற் புருடமெழில் அகோரம்வாம தேவமுடன் இ
லங்குஞ்சத்தியோ சாதமுமேல் எலாமாங்குடிலையிவை
யாறும்
பேசாநின்ற முருகனெழின் முகமென்றிருக்குப்பிதற்றுவ
து பேணிப்பரிசோதனை புரிந்தாங் கேகாதசத்தும்பிரியா
மல்த்
தேசார்மஞ்சத்திருமுத்தஞ் சிறந்தோய் ஞானவமிர்தூறுஞ்
செங்கேழ்க்கவிர்ப்பூ இதழ்குவியத் தெய்வச் சிறுமுறுவ
ரேன்ற
மூசானந்தக்கனிவாயால் முத்தந்தருக முத்தமே முளரித்த
டஞ்சூழ்குமரிநகர்முதலே முத்தந்தருகவே. (௩௰௨)

அநாதிமாயாமூலமலம் அணுகிற் றையோ ஆருயிருக் கா
ரோர்க்கி அளிப்பரென்னும் அருளோர் உருவாய் அமைந்
தனால்
எநாதியானென்றிடுஞ்செருக்கை இகமின் புலவீர் புலவீரெ
ன் றெம்மான் இவன்றன் ஒளியின்மறைஇசைத்தைந்
தொழிலும் அசைத்தனை நீ
மநாதியறிதற்கரிய திருவடிவேதுவாத சாந்தவெளி மருவும்
பரையே பராநாத வாழ்வே வானோர்சிகாமணியே

மூனறிஉலகுக்கான கந்தி முளையேமுத்தந்தருகவே முழுதும் உணர்ந்தோன் விழியுண்மிளிர் முலையாய் முத்தந்தருகவே
சோலைக் குயிற்பேடன்றெனக்காண்டோறுந்தெளிவந்தாலு முண்மைத் துணைச்சேவலின் மாழாந்துசெய்கை தோன் றுதாகி மேலிலத்தே
மாலைப்பொழுதுகூ உங்குரலும் மதவேள் போரும் அறியா மல் மருள்கூர்ங்கன்னிப் பதியமர்வேம்வடிவிற் சிறியமாத ருன்னைப்
போலக்கவின் பூத்தனமென்றேப் பொருத்துகில்லே மின்ப வெள்ளம் பொங்கித்ததும்பும் நின் கனிவாய்ப் புனிதமுத் தம் வேட்டனமால்
மூலப்பழமா மறைப்பொருளே முத்தந்தருகமுத்தமே முழு துமுணர்ந்தோன் விழியுண்மிளிர் முலையாய் முத்தந்த ருகவே. (சச)

நெருக்கிக்கன்னற்காடொடித்துப்பொதிரூஉத்தரளம் நில வெறிப்ப நெய்தற்குமுதமுகையுடைத்து நெக்குத்தீந்தே ன் உடல்சோரும்
கருக்கொண்டலைநீர் கவட்டடிச்சூற் கயவாய் மேதிகனைத் துழியுங் காலன்பகடு துள்ளிபெழுங்கன்னித்திருவூர்க்க ணங்குழாய்
மருக்கொண்முல்லைப் புறவமெலாம் மகரக்கோட்டமுத்து றழவாரிவாரி எறிதரங்க வாரித்துறையின் முதுவாழ்வே
முருக்குச்சிவப்பூர் நின்கனிவாய் முத்தந்தருக முத்தமே

முழுதும் உணர்ந்தோன் விழியுண் மிளிர்முலையாய் முத்தந்
தருகவே. (சுயரு)

மதியம் உமிழும்திருமுத்தம் மருப்பிற் கேழல் வருமுத்தம்
மற்றுஞ்செனிக்கும் முத்தமெலாங் கன்னிப்பதிவாழ் மட
நல்லாய்
கதியநின்சீறடிமலர்க்கீழ்க் கலந்து வணங்கக்கண்டனமாற்
காலாதிகளின் ஒளிமழுங்காக்கனலிற்புனலிற்கட்டழியாப்
புதியகதிராய் அழிவிலதாய்ப் பொருந்தும்விலைகூறரிதாகிப்
புவனமெல்லா வெயில்விரிக்கும் பொருவில் இன்பப் பே
றுதவும்
முதியஅமுதூர் நின்கனிவாய் முத்தந்தருகமுத்தமே முழுது
முணர்ந்தோன்விழியுண் மிளிர்முலையாய் முத்தந்தருகவே

வேறு

உச்சிவிலோசனம் நச்சுபயோதரம் ஒண்களம் ஆனனமோ
டுபயகரந்துடைசீறடிமென்மொழி உவமைக்குடைவுறு
மேற்
பச்சிளம்ஒளடதியேபொதிர்முட்டக் கன்னன் மலர்ப்பதுமம்
பாசொளியக்கத லித்தடி யிருகழை பணிவெண்மதிகூனல்
அச்சுறுவேழமருப்பு பிறழ்ங்கயல் அம்புதி ஆனஎலாம் அ
வைதரு குளிர்முத்தங்களுன் அலர்வாய் முத்தத்திணை
யாமோ
முச்சுடருக்கொளிதந்த பரஞ்சுடர் முத்தந்தந்தருளே முத்
தமிழ் சேர்குமரிப்பதிநாயகி முத்தந்தந்தருளே. (சுயஎ)

கத்துதரங்கப்பொன்னித்துறைவன் கௌரியன் முதலா
னோர் காசினிஅளவுக்கோங்கர் துகினக்கனகிரியெழுவா
யாத்
தத்துரக்கினம் அணையிடுசேதுத்தலம்வரை உளவேந்தர்
சதுரங்கங்கொடுமுகில் கிழிமொட்டுத் தடமான்றேர்தாவி
நத்துக்குலமுமிழும்படி சூழுடநாணொடொறுமோயா நல்கு
திறைக்குவை அள்ளிக்கொட்டவும் நாகாதிபமெற்றாவு
முத்துநிரைத்தமிழ் சேரளர் கோமளை முத்தந்தந்தருளே
முத்தமிழ்சேர்முமரிப்பதிநாயகிமுத்தந்தந்தருளே. (சஅ)

வேறு.

அஞ்சக்கரத்தினுட்பாசவொழி வாக்கிமற்றுங்களும் பரம
வுருவை அணவிநீங்கிற்றி அப்பயத் தாத்துவிதம் ஆவை
யென்றழுகுசொரியுந்
தஞ்சக்கரங்கொடுபொழித்தருளினீர் மையாற்றமியனேற்கு
தவுகுருவே சச்சிதானந்த நிலைவரவுங்கடாட்சஞ்செய் த
னமென்னுஅமுதமொழியே
செஞ்சக்கரப்பாணி யொடுசார்ங்கபாணிபணி தெய்வத்திரு
ப்பெண்பிளாய் தேவர்க்கெலாந்தேவமாதேவர்தந் தேவ
பார்த்திவ தேவியே
கஞ்சத்தளா யாட்சிசகசீவபர சாட்சி கனிவாயின்முத்தமரு
ளே கன்னிநகர்வந்தநங் கன்னிப்பிராட்டிநீ கனிவாயின்
முத்தம் அருளே. (சயகூ)

வேறு

கயமுகத்தன் அறுமுகத்தன் இருவர் மக்கள் கடுகவே
கருணைசொக்கி அருள் சுரக்கும்மறலி வைத்தகருவியே
பயமிருத்தன் வரமிரக்க நகைஉயிர்த்த பணிலமே
பவமெனச்சொல் திமிரமெற்ற இவணுதித்த பருதியே
அயன் அரிக்கும் அமரர்கட்கும் அகலிற்கும் அரசியே
அடியவர்க்கும் மிடியவர்க்கும் அணவிநிற்கும் அடிமையே
சயமிகுத்த குமரியத்தை தருகமுத்தந் தருகவே
சமரிநற்ற வர்களுளத்தில் தருகமுத்தந்தருகவே. (ருய)

முத்தப்பருவமுற்றுற்று.

---

ஆறுவது,

## வருகைப்பருவம்

வேறு

தேம்பிழி கடுக்கையங் கண்ணிமுகைநெரியூஉத்திருப்புயப்
புளகரும்பச் சீருருத் திராதிமறை மணிமவுலிதண்ணெ
ணச் சீறடி பெயர்க்கு மடவாய்
பாம்பினச் சூட்டுமுடிமீதுகண் படுநிலப்பாவையெழின் மார்
பினினது பங்கயத் தழுகொழுகு நறவச்செழுஞ்சுவடு ப
ட்டுச்சிவீரென்னவே

கூம்புநன் காந்தள் பற்றிடவந்தவாறெனக்கும்பிட்டுநின்று
ளேம்பாற்கோலச்சிலம்போடரிக்குரற்கிண்கிணிகள் குளி
றக்குளிர்ந்தபசிய
காம்பிணங்கும்பணைத் தோளுயர்த்திட்பெரிய கானமாங்கு
யில் வருகவே கன்னிமாநகரிலெழுகன்னிமாமகளிர்தொ
ழு கன்னிநாயகிவருகவே (ருமக)

அஞ்சதூவியும்அனிச்சப்போதும்நின்னடிக்காமாம் பருக்
கைஎன்பார் அஃதான்று நாஸ்திக விதண்டவாதியர்மன
மும் அணுவென்றுகல்லென்பராற்
கொஞ்சமுந்திருமுடியின் உல்வாதஞானக்கொழுந்தென் பர்
இவையனைத்துங் குறிக்கொண்டு ளேனிதயமலர்குளிர
முத்தரிக் கோலச்சதங்கைகொஞ்சப்
புஞ்சநிரை கன்னிமாபுரியம்பலத்திற் பொலிந்தாங்குபுதியத
ளவப் புன்னகை அரும்பிமிகு தண்ணளிகள்கண்ணளி பு
ரிந்தெழில் புனைந்தகார்காற்
கஞ்சமலர்மீதுவரும் ஓதிமப்பேடுறழ் கலாபமா மயில் வருக
வே கந்நிமாநகரிலெழு கந்நிமாமகளிர் தொழு கன்னிநா
யகிவருகவே. (ருமஉ)

வேறு

தென்னம்பொழிலின் நெறியகுஞ்சிக்குமரர்குழுவிச் செவ்
விளநீர் திருக்கிக் குலுக்கி உலந்தாக்கக்கண்டுபகைதீர்க்
குநர்கொலென்றே

கன்னற்கிளவி மகளிரகலிடமேன்மோதிக் கட்குழித்துக் காமனெடும்போர் அடவியினுங்காண்டாரென்றம்புயப்பு துப்பூம்
பொன்னந்தாதுமணிப்பவளச் செங்காலுழுது பொலன்சிறையிற் போர்த்துமஞ்சணிறம் பூசிச் சேவன் மருளப்புலர்ந்து வெண்பேட்
டன்னம் பொலியுங் குமரிநகர்க்கரசேவருகவருகவே அருள்கூர் கடைக்கட்பகவதிப்பெண் அமுதேவருகவருகவே

நுணங்குங் கேள்வித்துகடீர்ந்தோர் எருத்தங்கோட்டிநொறில்படைப்ப நுண்பொற்றகட்டபல்லவத்தேநுழையுங்குயிற்பஞ்சமசுரத்துக்
கிணங்கும்மடவாரிசையுமயில் இசையும் மதமாப்பிளிறிசையும் ஏகீபவிக்கும் அகன்பொழில் சூழ்குடகர் வளர்க்கும் இளங்குயிலே
கணங்கொண்மணிகள் தமைத்தாரா கணமென்றயிர்த்துக் கணபதியும் கலந்துமாதாமுகமதியைக் கண்டுவெள்கிப்புறங்காட்டும்
அணங்குதிகழூந் தென்குமரிக்கரசே வருகவருகவே அருள்கூர்கடைக்கட்பகவதிப்பெண்ணமுதேவருகவருகவே. ()

திணிகொண்டிலங்குங் கற்பகக்காச் சினையகுறுந்தா ணறுமுகையிற்சென்றுபுடைக்கமடலவிழ்ந்துசெந்தேனொடித் திரைக்கரத்தே

மணிகொண்டிலங்கும்நீண்மகரவேலைமடுப்பவான்மகரம் ம
றுகுமகரக் கோடிமாடமறுகார்கன்னிமடநல்லாய்
துணிகொண்டிலங்குங் கிரகமண்டிலத்திற்றுவுஞ்சுயவயிரத்
தூணூர்ந்துசனன் வயிரமணித் தோன்றலாகுந் துகின்
மாடம்
அணிகொண்டிலங்குந் தென்குமரிக்கரசே வருக வருகவே
அருள்கூர்கடைக்கட் பகவதிப் பெண்ணரசே வருக வரு
கவே. (ருயரு)

நீள்கைக்கொண்டல்முதற்றேவர் நெடுநீர்க்கன்னித்துறைப
டிந்து நின்றுள்வணங்கிக் குறையிரந்த பொழுதேநீலகிரி
யனையான்
ஆள்க்கைகொண்டதிகிரியுங்கார் அனையகளமும் வெட்டுண்
டிட் டசலம்பிளந்தாங்ககலமகிடவாயிற் புண்ணீர் அலை
யெறியச்
சூள்கைகொண்டு மணிக்கறங்கிற் சுற்றி நெடுமின்னினங்கா
ன்றா சுழல்கட் கொடியமறலிமுதற் சூரர்கைவாட்டுணை
சூழும்
வாள்கைக்கொண்டசயவீரி வருக வருக வருகவே வாகைச்
செல்வர் வளர்த்தகிளி வருக வருக வருகவே. (ருயசு)

அயங்கல்வயிர முதற்பொருள் வெள்ளிரிக்காய்போல் அக
நெகிழஆலாலமுந்தான்விடமாகஆகவடவைசானவிபோற்
பயங்கொண்டுரறும் பண்டனும்வா ஞசூரனுமாமிவர்கள் ச
த்திப் பதாதிக்கரசி உனைநினைந்த பொழுதே உள்ளம்பத
றுமோரா

இயங்குஞ் சூறுவளிக்காற்றும் இடியின்குலமுமின்னினமும்
ஏகீபவித்துத்திகாந்தமெலாம் இரவிஅனந்தம் உதித்தாற்
போல்
வயங்குந்திரிசூலப்படையாய் வருகவருகவருகவே வாகைச்
செல்வர் வளர்த்தகிளி வருகவருகவருகவே. (௫௰எ)

கரும்புக்கினிமைதருங்கணுவில்கரும்பேவருக மெஞ்ஞான
க்கனியேவருக ஆனந்தக்கடலேவருக கலாமதிக்கும்
அரும்பும் அமுதகலையளித்த அமுதேவருக அருள்நிறைந்த
அடியார் இதயாம்போருகத்தண் ணளியேவருக அமர
ரெல்லாம்
விரும்பும்பெரியோன் அகந்தூண்டா விளக்கேவருக வேதா
ந்த வெளியேவருக தமியரின்பால் வேண்டுங்கருமந்தர
வருக
பரும்பொற்குடத்த மதிற்குமரிப் பதியாய் வருக வருகவே
பகவற்குணநாணிநாமப் பவானிவருக வருகவே. (௫௰அ)

வேறு

பனசஅமிர்து கதலிநறவு பசியகழையின் இரதமாப்
பழமுமொழுகி வழியுநனைகள் பரவிஇயலும் நதியவாய்க்
கனசகுலமோடறுகுபுரளும் உனதுநகரின் அயலுறுக்
களிகொள்பமரம் முரலுபொழிலின் உலவுநரகணிகையர்
தாந்
தினசகசரர் எழுவருவ சிசமுதறிவிய சுமுகராற்
றெரியவரிய ரெனினினமுகு சிறியநவில எளியவோ

வனசமகளிர் மவுலிசரணி வருக வருக வருகவே
யகிலைமதழுவு குமரிநகரி வருக வருக வருகவே. (நுமசு)

கறையில்மதியை யொளிசெய்வதன கமலைவருக களைகளுக்
கருதுமடியர் சென்னவருண கலனைவருக கரையிலா
நிறைதணளிமல் உததிவருக நிமலைவருக நிசிசராள்
நிகமென்விழவின் மதர்கொள்சமர நிபுணிவருகநிகரிலா
துறைபுமொருவன் மனதில்வதியும் உவகைவருக உறவிலார்
உறவுவருக அவனை உணரும் உணர்வுவருக உலவுரு
மறைகடுதிசெய் கமலசரணி வருக வருக வருகவே. (சுய)

வருகைப்பருவமுற்றிற்று.

---

ஏழாவது,

## அம்புலிப் பருவம்,

வேறு

கண்ணகல் விசும்பெலாந்தண்ணளி கொழிக்குநீ காமரிள
வஞ்சியிவளுங் கருணையாம் மிளிர்பெரிய தண்ணளிகொழி
ப்பணிகாமரி வியன் மாமுடிக்
குண்ணறுங் கண்ணிமேற் றுங்கவளல் மற்றிவளும் உளட
லிற்றுங்கவல்லள் உம்பருக்கமுதுநீ தருவைமதி மண்டி
லத்துற்றிவளும் அமுதுதருவள்

பெண்ணரசிவட்குமுத்துண்டஃதுனக்குண்டு பிரவையின் உ
வாத்தந்து நீபேடைமான் இவண்முகக்கிணைசெய்வையென்
றினர் பேசினர்கள் ஆதலிந்த
அண்ணலங்கன்னியுடன்நீ நிகர்தியான் மகிழ்ந்தம்புலீ ஆட
வாவே அமர நாயகர்பரவுகுமரிநாயகியினுடன் அம்புலீ
ஆடவாவே. (கூ௰௪)

வாய்ந்தசீர்மாமனர் ஒடுசெய்தகட்டுரை மறந்து வெஞ்சர்ப்
பெய்தி மாழாந்தலைந்துழலும் வாய்மையிலியென்று மா
ருத கயரோகியென்றும்
காய்ந்துதங்கன்னியஞ்சூழலைச் சுடுகின்ற கள்வனீயென்று
மொருநாட் கருதவுங்கூடாத அவமதியனென்றுமிரு
கட்செவிக்காளகூடப்
பாந்தளுச்சிட்ட நீயென்றுநின் இழிவெலாம் பாராட்டிடாமல்
லம்மைபண்புறுகலாபேதமென்று கொல்வம்மெனப்பகர
வும்பெற்றுபுனக்
காந்தகைய சீரிதன்றுதலால் நீவிரைந்தம்புலீ ஆடவாவே அ
மரநாயகர் பரவு குமரிநாயகியினுடன் அம்புலீ ஆடவாவே.

தெளிதூங்கும் அமுதுசில தேவருக்குதவிநீ தேய்வையெ
ன்றுந்தெவிட்டாச் சிவஞானதெள்ளமிர்தி யார்க்குமுதவு
ற்றிவள் சிவாகாரமாகிநிறைவாள்
துளிதூங்குவிடதரத்தஞ்சுகிற்கின்றியது தோகைசாயற்கு
வெருவுந் தோன்றுமை நாட்சிறிதொளித்திநீ ஈங்கிவள்
சதோதய சுயப்பிரகாரி

களிதூங்கும் நீயொருகளங்கியிவளகளங்கி காசினியை வல
ம்வரவொருகன தினஞ் செலுநினக்கிவள்கலைகணத்தண்ட
கோடிகள்கடந்துவருமால்
அளிதூங்கும்இவளொடெவ்வாறுமொப்பாயல்லை அம்புலீ
ஆடவாவே அமரநாயகர் பரவு குமரிநாயகியினுடன் அம்
புலீ ஆடவாவே. (௩௰௩)

கண்ணுதற்பெம்மான்சடாட விதவழ்ந்துங்கழித்தியலைவெ
ஞ்சாபநீ கன்னிகை ஒருத்திசரணம்புக்கினென்றுங்கலா
பூரணஞ்சேரலாம்
விண்ணகத்துலாவாது வீடகத்துற்றுமெஞ்ஞானவமிர்தாய்
நிறையலாம் விளங்குசிகியஞ்சாயல்கொண்டுபகையோட்ட
லாம் விபுதர்களையேவல்கொள்ளலாம்
மண்ணுலகில்உனதுகய ரோகமாறற்கிந்த மாத்தலம்போது
மல்லான் மற்றினியும்வேண்டுமோ விண்ணுறுசேறியென்
மாலாதி தேவர்க்கெலாம்
அண்ணரியமாதரசி நினைவிளித்தனள் காண்டி அம்புலி ஆடவா
வே அமரநாயகர்பரவு குமரிநாயகியினுடன் அம்புலீ ஆட
வாவே. (௩௰௪)

சூலமாமனுக்குமங் குருபரற்குந் தெய்வமுதல்வனுக்குங்
கோள்செயீ இக்குறைபட்டுவசைபட்டகொடியனேமென்
றுகோட்டங்கொண்டுவிட்புலத்தே
வலமாகி ஓடுகின்றாய்கொலோ அம்மனருள் வந்தால் வராத

தென்னோ மாபாதகர்க்குமிவள் கதியுதவுபேரருளின் மா
தாவெனக்காண்டி நீ
சலமாயநல்குரவு கடவுணிட்சேபந்தரப்பெற்ற நாளினுண்
டோ தமியைநின்னைப்பவித்திரமாக்குநன்னாட்டிலைப்பட்ட
தின்றுசொன்னேன்
அலமாந்துதிரியல்நீ அரசிளங்கன்னியோடம்புலீ ஆடவாவே
அமரநாயகர்பரவு குமரிநாகியினுடன் அம்புலீ ஆடவாவே

பெருமறைகள் ஓலமிட்டென்னாளும் எட்டிப்பிடிக்கருஞ்
சோதிதன்னைப் பிரியாமல் உள்ளுறச்சிக்கெனச் சிறைசெ
ய்வள்பிரமாதிதேவர்க்கெலாங்
கருமறைவொழிக்கலாமும்மலச்சிறையைக்கழிப்பள்சகளே
சர்தொழிலுங் கண்சாடையாய்த்தருவள் நிட்களேசர்க்
கொரு கருத்துமின்றாய்க்கழிப்பள்
உருமறையும் அருள்வடிவை என்னென்றுகருதிநீ ஓடுகின்
றாய்மதியிலீ ஒள்ளொளியும் உன்னதுகொல் வெளிபுக்
கொளிக்குநரும்உளரோ புவிமீதிலே
அருமறையும் அறிவரிய கன்னிநகர்விமலையுடன் அம்புலீஆ
டவாவே அருமறையும் அறிவரிய கன்னிநகர் விமலையு
டன் அம்புலீஆடவாவே. (௯௰௯)

நச்சுக்குரற்குமுறுகிற்கிற்றிகாதிலென நவியம்பிடித்தவன்
சீர்நலமோர்வுறுதுசிறு விதிபுரியுமகசாலைநணுகிநாரணன்
மார்பினின்

றெச்சுற்றிமிழ்ந்தெண்புலிங் கத்திலக்குமியர் எண்டிசையி
னுந்தெறிப்ப இடியேறுகுப்புற்றெனத்தாக்கி பின்னையும்
இருங்கழலினுற் றேய்த்தனன்
கர்சுறற்றெவெம்முலைப் பயிரவிக்கிறைவனுங் கலைநான்கு கா
ணரிதெனக் கட்டுரைத்திட்டவனும் இவள்சிறுவரென்று
நீ கருதலாயோ கன்னிபால்
அச்சுற்றிடாமையழ கன்றுசொன்னேன்விரைந்தம்புலீ ஆ
டவாவே அமரநாயகர்பரவு குமரிநாயகியினுடன் அம்பு
லீ ஆடவாவே. (௬௰௭)

விண்டலத்தொளிமுழுதும் முடவனுகுறுமாறு விழிபுகை
யும் மேதிமுகனை விபுதரிறையம்பறைஅறைந்தசயபண்ட
னை விறற்பெரியவாணன்றனை
மண்டலத்திற்சென்னிகொய்துபந்தாடியது மதியநீஅறியாய்
கொலோ மற்றிவள் சினம்புரியில் வேறுசர ணேதுபுகல்
வானவர்சிகாமணியெனனக்
கொண்டமுக் கட்பரமன் அரிபிரமர் இவருட்குறிப்பறிந்
தொழுகுநரலாற் கோமாட்டி முன்பெதிர்செய் வாரில்லை
யாருமிக் கொற்றவட் கடிமைகண்டாய்
அண்டரும்பழமறையும் ஓலமிடநின்றவளோடம்புலீ ஆட வா
வே அமரநாயகர்பரவு குமரிநாயயினுடன் அம்புலீ ஆட
வாவே (௬௰௮)

வேறு

சூதப்பலநற வோடிக்கதலி வனத்துறுசுகமெல்லாஞ்
சுரபஞ்சமஇல்லத்துவிருந்தயர் சுவைகண்டிருந்தின்கட்

பேதந்தெரிவரு பொழில்சூழ் கன்னிபிரிந்தகலத் தகுமோ
பிரமாதியர்பதமியாவையுமிந்தப் பேரூர்க்கிணையாமோ
மேதக்கவரினும் மேதக்கவருனை வேண்டியழைத்தனளால்
விரும்பியபோது மறந்தயல் செல்லேல் செல்லேல்வெண்
டிங்காள்
மாதர்க்கரசியி னொடினிதாடிடவா அம்புலீவாவேமகபதிவழி
படு பகவதிஅருகேவாவம் புலிவாவே (கூ௰கூ)

கூஎசுறுபொன்னந்தாமரையோனுங் ககனருமுனிவரருங்
கண்ணகன் ஞாலத்தெண்ணருகுமரிக்கண்ணவர் துதிசெ
ய்யத்
தேசுறுதிருமறு மார்பன்சூழ்ச்சி தெரிந்தொருபுடைநிற்கத்
திக்கவரொடுருத்திரகணமேவல் சிரங்கொடுகடைநிற்க
ஈசனுந்தண்கட்கடைநோக்ககலா தென்றுந்துணைநிற்க என்
னோபேரருண் மறுவிலரியாரையும் எண்ணுதென்னம்மை
மாசுடையோய் நினைவாவாவென்றனள் வாவம்புலிவாவே ம
கபதிவழிபடுபகவதி அருகேவா அம்புலிவாவே (எ௰)

அம்புலிப்பருவமுற்றிற்று.



எட்டாவது

# அம்மானைப்பருவம்

வேறு

செங்கேழக்குருஉமணிச் சுடிகைப்படப்பாயல் சென்றமா
ல்கண்படுக்குந் திரைகடல்கடைந்தெடுத்திட்டநவநீதஞ்
சிறந்ததன் றாழ்த்ததெனவே
சங்கேறுழக்கு கன்னித்துறையெடுத்தமிர்த திரளைகள் த
னித்தனியவாய்த் தைவதர்தொகைக்குவின் னைவுறுந் த
கையெனத்தரளமே ஆகுமென்னப்
பங்கேருகத்திருந் தோதிமப்பிள்ளைகள் பறந்தெனப்பரிய
விண்மீன் பகலிற்சிறந்தெனத் தோண்முதல் நடந்தணி
படர்ந்துபலகோடிசெல்ல
அங்கேரளத்தரசர் தொழுமிளங்கன்னி நீ அம்மானை ஆடி
அருளே அச்சுதற்குடன்வரும் பச்சிளங்கிள்ளை நீ அம்மா
னை ஆடி அருளே. (எ௰க)

சுரும்பிமிர் குழற்கங்கை நினதுசுந்தரசாயல் தோயுமாருலி
யாகிச் சூழ்கிடந்தனளந்தவஞ்சகமுணர்ந்துநீ தூக்கிவிட்
டெறியுந்தொறும்
திரும்பிவருவாறு மீண்டுளதடியருக்குமிச் செயலால் வேறு
முண்டோசிவனுதற்கட்கனல்பொடித்தவரு மந்தனைத்தீர்
க்கவொருதிறனுமின்றிக்

கரும்புச்சிலைக்கடவுள் நின்னிருவிழிக்கடை கசிந்தொழுகுங்
காமசாரங் கடுகளவு வேண்டியேஉகசோடிதவமுறக்கண்
டருள் கனிந்தமுறுவல்
அரும்பும் கிளிக்குதலை பொழிகுமரி அம்மனை அம்மானை ஆ
டியருளே அச்சுதற்குடன் வரும்பச்சிளங்கிள்ளைநீ அம்மா
னைஆடியருளே. (எ௰௨)

எண்ணார்க்குபேரறம் வளர்த்துச்செவந்தநின் இருகரத்தெ
ற்றிமார்பத் தெல்லையிள வுஞ்செய்ய மணியாகி விடமுண்
டினித்தவர்கிறங்குமையுண்
கண்ணாரும் நிழலிற்படிந்திந்திரநீலமாய்க்கதிர்த்தரளம் ஆகு
மாலோ கனிமுறுவல் இளநிலாத் தோய்ந்துநின்னம்மனை
கலந்தவாறறிவதெவனோ
தண்ணார்மதிக்கொழுந்தொடு மின்பிழம்புந்தயங்கிணுங் கிரு
மருங்குந் தாதியர்கள் ஆனமலர் மாதர்களு நின்கைச்
சமர்த்தறியவேண்டிஉழல்வார்
அண்ணாந்துமுகமலர்தாலழகு சொரியநீ அம்மானை ஆடிஅரு
ளே அச்சுதற்குடன்வரும் பச்சிளங்கிள்ளைநீ அம்மானை
ஆடியளே. (எ௰௩)

மிக்கொராயிரகரங்களுமிக ஒடுக்கியே விண்மணிமுதற்கொ
ன்பது வெங்கோளும் அஞ்சிநின் கன்னிநகர்வலமாய்வில
கி அயல் ஓடினர்களாற்
செக்கர்மாணிக்கங் குயின்றிட்ட தாதியாத் திகந்தம்வில் ல

எறிக்குமொன்பான்தெய்வரெத்தினமிட்டிழைத்த அம்ம
னையெலாஞ் சேட்செல எடுத்தெறிந்து
தொக்குவன தொல்லைநீ நிருமித்த அண்டத் தொகைக்கும்
ஒவ்வொன்று சுடர்கள் தூக்குவன நேருமாற் சகசீவர்
முழுதுஞ்சுறுக்கொளரெளத்திராகாரத்
தக்கடவுள் பிறரையம் மனையாடுமாறுபோல் அம்மானை ஆ
டி அருளே அச்சுதற்குடன்வரும் பச்சிளங்கிள்ளைநீ அம்
மானை ஆடியருளே. (௭௰௪)

பேராறும் அம்பரமடந்தைக்கு மின்னற் பிழம்பினை உருட்
டி வடமாய்ப் பின்னுமிழைகோத்திடா தன்னை நீ சூட்
டிப்பிறங்குமா றொக்குமொருகாற்
காராருமகவேந்தன் உடல்முழுதாகுபல கண்டிறந்தொக்கு
மொருகாற் கார்வண்ணன்மணியாழி உருளுமியல் காட்டி
க்கறங்குமியலொக்குமொருகாற்
றேராரும்மாழைச் சகட்டிற் டெழுந்தூளி சென்றுகுல கிரி
யெட்டையுஞ் செய்யகன காசலமெனப்புரிய வாணியென
ழுசெல்லொலி ஒடுங்கஇமிரும்
ஆராரும் ஓதைகடல் ஓதையெதிர் குமரியிறை ஆடியருள்
அம்மானையே அம்பொன் மலைவில்லிபுணர் செம்பவளவல்
லிநீ ஆடியருள் அம்மானையே. (௭௰௫)

செஞ்சுடர்க்குருவிந்த மாமணியின் அம்மனை செறிந்தெழு
கதிர்க்கற்றைபாற் சீருடராக்கோள் உலைந்துமாழ்கின்ற
து தெரிந்துவாமதிநகைநிலா

விஞ்சப்பொழிந்தனையவெண்டரள அம்மனை விளங்கமே வி ண்முழுதுமாய் வில்வேள்தனக்குமணவினைகருதி இளவர சு வேலைவாய்முரசமெற்றக்
கொஞ்சுங்கிளிப்புரவி அணிவகுத்தேகுங்குலாட்டைக்குமரி நகர்வாழ் கோமாட்டியின்னமொருதரமின்கண் மலைபோற் குவித்திட்ட அம்மனையெலாம்
அஞ்சுவன்னச்சுரும்பொருகாற் பறந்தென்ன ஆடியருள் அம்மானையே அம்பொன்மலை வில்லிபுணர் செம்பவள வ ல்லிநீ ஆடியருள் அம்மானையே (எ௰சு)

சாதனம்இரண்டிரண்டும் பருவமாகிச் சமாதியாற்றனை அறி ந்து தலைவனைக்கூடிப்பிர போதக்கருக்கொண்டு தானே யிருந்துமுற்றி
பேதனம்எனும்பெரிய வேதனைகடந்து சிவமுத்தன்பிறந்த போதே பிறவுமொருபேறுவேண்டாதுயிர்த்தாய்கெட்ட பின்பந்த அருமகாருக்
கோதனமெனுஞ்சிவானந்த வமிர்தூட்டிச் சுகாதீத நித்தி ரையுற உண்மையில் வளர்த்திடுஞ் செவிலிநீ அல்லாமல் உண்டுகொல் உகாந்தமுடிவில்
ஆதனமெனக்கன்னிநகர்வீற்றிருந்தகுயில் ஆடியருள் அம் மானையே அம்பொன்மலை வில்லிபுணர் செம்பவளவல்லிநீ ஆடியருள் அம்மானையே. (எ௰எ)

வேறு

இரணி பருவம் ஆகத்தரிசொலி ஏய்ந்திடும்ஞெகிழுமணிந்
தியோசனைகோடித்திட்பகடாகம்எடுத்தம்மனைகுயில்வார்
தரணியில்அளவறு பயிரவிகாளிகள் சாமுண்டிகளோடு
சண்டிகைமுதலாய் நின்றளவீரியர்தாமும் வியப்பெய்தக்
கரணிதம்ஒன்றின் பின்ஞென்றம்ம கணத்தில் அனந்தம்
விசைகாட்டும் பரிசட்டாங்கமு நாஞ்சில் கலந்ததை ஓங்
காரத்
தரணிடுகன்னிப் பதிவாழ் அம்பிகைஆடுகஅம்மானையே
அகணிதலோகசராசர ரஞ்சனி ஆடுகஅம்மனையே(எம்அ

குசலந்தருபுல மையினேடாக்கங் கொள்குநர்வம்மென்றே
கூவுதல்லாற் சங்கநிதிப்பெயர் கொள்வதுவேறுண்டோ
சசலத்தீம்பால் ஒழுகுறுசுரபித்தாட்கவை அடியெல்லாந்
தரளம்இமைக்குஞ் சீரியகன்னித் தலம்வாழென்னம்மே
கிசலச் சீறடிபோற்றிச் சதமுனை கெழீஇயதடக்கையுடைக்
கிளர்பலகூதனன் ஆதியர்சூழுங் கேழொளிவிடுசெம்
பொன்
அசலச் சிந்தாமணியுட் கற்பகம் ஆடுக அம்மனையே
அகணிதலோக சராசரரெஞ்சனி ஆடுகஅம்மனையே. ()

வேறு

தளவொளி தருமவள் மகிழ்வரஉலகு சமைத்தனன் அம்மா
னைத்தாயைநெடுங்கதிர் வேலுடையான்முறை சார்ந்திடும்
அம்மானைத்

துளகுறு கோடீரத்துக்குமிழி துதைந்தெழும் அம்மானைச
சூடிக்கான்வழி ஓடிச்சாடு சுடீரிய அம்மானை
மளமள இரைகென்றேந்திக்கந்தரம் மீதினில் அம்மானை
வாசுகிவிடம்வைத்தேதினம்வாகனம் ஆக்கினன் அம்மானை
அளவறும் இவர்முதல் வாக்குத்தலைமகள் ஆடுக அம்மானை
அழகியகுமரியிம் வளர்களி இளமயில் ஆடுக அம்மானை()

அம்மானைப் பருவமுற்றிற்று.



ஒன்பதாவது,

## நீராடற்பருவம்

வேறு

வண்டிரையும் நெடுநாணி வில்லியை எரித்திட்டமனவலி
யை அறிவோமென மற்றுநீ காமக்கடாட்சமொரு துளி
பொழியும் வாரிதியின் அலைபுரண்டே
கண்டிரையும் மறையுமறி வரியபரமேசர்படு கவலைக்கிலக்கு
முண்டோ காமப்பெரும்பேய் பிடித்தாட்டும் ஆட்டமோ
ர் கடுகளவு தணியவிலையே
கொண்டிரையெனுப்பெரிய சிவஞான அமிர்திற் குழைத்தி
ட்ட குழவிமுடிமேற் குளிரப்பொறித்தசெந்தாமரை கதி
ர்ப்பக்கு ழற்சைவலக் கொத்தெழ

வெண்டிரையு வட்டு பொருநைத்துறைகு டைந்துபுது வெள்ளநீர் ஆடியருளே வெள்ளிமலை ஞற்கிருபொன் மலையுதவுகன்னிநீவெள்ளநீர் ஆடியருளே. (அ௰க)

பாதாந்த கேசத்தினுக்கறல் ஒதுங்கிப்பணிந்து படியிற்படியவும்பனிவெண் ணிலாத்தரள முந்தந்த பந்திக்குடைந்துபணிலத்துருளவும்
நாதாந்தநூபுரக்கீழ்மௌவல்முகையென்ன நணுகுகொந்தார்சதங்கை நரலைக்குலைந்துகரை தன்னில்லை மோதவெழில் நளினமொன்றியாண்டுமலரக்
காதாந்தம் ஓடுகட் கயலுக்குமாழ்கிமிகு கயன்மடைக்கயலொதுங்கக் காமர்சூழ்வள்ளைநாம் வள்ளையல் லேமென்று காசுறழ் செவிக்கலமர
வேதாந்தசித்தாந்ததுறையிலிந்தித்துறையில் வெள்ளநீர் ஆடியருளே வெள்ளிமலை ஞற்கிருபொன் மலையுதவுகன்னிநீ வெள்ளநீர் ஆடியருளே. (அ௰உ)

முக்கரண் தூய்மைவேண்டினர்படியும் இமகிரிமுகட்டொழுகுபாகீரதி முதல்புண்ணியநதிகளியாவும் வந்தன்னைநீ மூழ்கிப் புனிதமாக்கெனத்
தக்கபடிகைகூப்பினின்றனன்னின்றனசரோசமுகிள் ஆனவேல்லாந் தன்முகடுபடுமுன்வெள் குற்றுடைந்தன சில சவித்துநாண் மலருதிர்ந்த
புக்கவரும் ஓதிமப் பேடெலாம் இருகரைப்பொங்கரிற் புக்கொளிப்பப் போகாமல் அரசவண்டேலாடக்கலவை புள்புலால் கமழுமீனம்

மிக்கவர்களைச்சார்ந்த பேதையர்க் கிணைகமழ் வெள்ளநீர் ஆ
டியருளே வெள்ளிமலைஞற்கிருபொன் மலையுதவுகன்னிநீ
வெள்ளநீர் ஆடியருளே. (அ௰௩)

வாகனமெனவந்து வெண்டோட்டுநறைகமழ்மலர்ப் புண்ட
ரீகமுடனே வம்பவிழ்சகஸ்த்திர தளத்தனபாரக மலிவய
நேமிவடிவுதிகழுங்
கோகனகமும்பக்கம் வருகின்றசேடியர்மருங் கெலாங்குறு
கநிறபக் கோமாட்டி நின்னுதனங்களிரு மலருமாம் என்
றவர்கள் கைம்மலர் கொடே
மோகனசுராசரியை யேந்த மிளிர்நாகமணி முழுதுற விள
க்கமேந்த முள்ளரைக்கமலங்கள் உள்ளன வெலாநின் மு
கத் தொழுகும் அழகையேந்த
மேகனகம்மகிழுவவிர் கன்னிநகர் அன்னைநீ வெள்ளநீர் ஆடி
யருளே வெள்ளிமலை ஞற்கிருபொன்மலையுதவு கன்னிநீ
வெள்ளநீர் ஆடியருளே. (அ௰௪)

வேறு.

தன்னந்தனிசே சமைபலமஞ் சுகமாய்மௌனஞ் சாதிப்பத
கமையாங்கமடம் பொறியடங்க முழங்கத் தசநாதப்
பணிலம்
இன்னம் உறங்காதருள்வெள்ளம் எழுந்திட் டெழுந்திட்ட
லையெறியூ உ இதயாம்போருகம் விகசித்திரக்கத்தீந்தே
ன்மிகப்பிலிற்றும்

பென்னம்பெரியோன் உளத்தடத்திற்பிரியாவிளையாட்டியை
வோய் நீ பேணிக்குழுவும் அரமகளிர் பிரியம்பூப்பப் பிர
மரஞ்சூழ்
பொன்னங்கமலத் தன்னம் அன்னைப் புதுநீர் ஆடிஅருளுக
வே புராரிக் கரியதிருக்குமரி புதுநீராடி அருளுகவே. ()

மருநெய்க் கூந்தற்காடுவிரிந்த கிளுமார்பிற் சாந்துநழீஇம
ணங்கொண்டவர்போல் எண்டிசையு மணக்கப் புதியமண
மகளிர்
இருணைத்திடுசெம் மணிக்கோவை இழைபோய் இந்திரகோ
பம் போல் இலங்கவசந்தன் வரக்குறைந்த இருநீர்நிலையை
க்கடந்திரையீ இக்
கருணைத்தலைவர் நகக்குறிகண்டெழுந்தகாமப் பெருவெள்ள
ம் களு லுந்தடஞ்சூழ் கன்னிநகர்கண்ணே கண்ணில்வரு
பாவாய்
பொருணைத்துறைவர்க் கரசிபொங்கப் புதுநீர் ஆடியருளுக
வே புராரிக் கரியதிருக்குமரி புதுநீராடி அருளுகவே

வேறு

ஓராயிரவெங் கிரணம்போற் சிவிறிநீர்புக் குவாமதிதான்
உடைந்தவோவன் றுவாமதிக்கே உடைந்ததம்போருகம்
போலும்
ஆராவதனம் அலமரச்செங் கரங்கள்உழக்கிஅலத்தகக்கால்
அடித்தும் நெளிந்தும் மறிந்துமலாந்தறன் முக்குளித்து
விளையாடேடப்

பேரானந்தப்பேறுழக்கும்பேதை மடவார் குழுஉக்கண்டுபி
ணைத்துப்புகுங் கண்ணிணைமீட்கப் பெறுமல் இளைஞோர்
பெருந்தகைவேள்
போரால் நந்துங்குமரிஅன்னுய் புதுநீர்ஆடியருளுகவே புரா
ரிக்கரிய திருக்குமரி புதுநீராடியருளுகவே (அமௌ)

வே று.

திணிபுயம் மழவுமிழ் அரசிளம் அரியேறிதயஞ் சென்றாத
ச்சிந்தையை அன்றிக் கண்ணெனும்வண்டுஞ்சீர்சால் ந
டையனமும்
கணிகையர் இரதிக்கைதத்தேன் இன்சுவை கனிமொழி அஞ்
சுகமும் கடைமுறையேவி அலங்கற்கொடுவரல் காணுத
வர்காண
மணிமுறுவற்றாதிதழ்விட்டேவிவயங்குநிலாக்கற்றை மதிய
ந்தேயநலித்ததை அல்லால் மறுவுண்டோவென்னும்
அணிதிகழ்குமரிப் பதிவளர் மின்கொடி ஆடுகநன்னீர் ஆடுக
வே அழகுத்மைழந்தகல்யாணசவுந்திரி ஆடுகவே. (அமீஅ)

வம்பவிழ் கொன்றைப் புதுநறைசென்றொரு மணிவண்டுளர்
வதென் வரநதிஅகடொரு மதிகுடைகுவதென வனசக்
கோயிலிலோர்
செம்பொன் அலமரல் எனஅயன நாவொருசிலைநுதல்திகழ்
வதெனச் செங்கால் ஓதிமம் ஒன்றமுதத்தடம் ஊடுதிளை
ப்பதெனக்

கொம்பொன்றதினால கேந்திய கேழற் கோலம்போற்செய்த குன்றமும் மதிலுஞ் சிகரமும் மாடக் கோடிசெயும் மதரடியும்
அம்பொன் நகுங்குமரிப்பதி அம்பிகை ஆடுகநன்னீர் ஆடுகவே அழகுதழைந்தகல் யாணசவுந்தரி ஆடுகநன்னீர் ஆடுகவே (௮௰௯)

வன்னச் சாந்திற் கரிகள்வழுக்குபுமகுடம் பறிபோய் வரமணியின்றொகை நீராஞ்சனமாய் மாணரசிளமைந்தர்
கன்னற் சிலையான் வெம்போர் கண்டது கனவுபலித்ததெனக் காரிகையார்பூங் கோதை கழித்தெறி காட்சியினான் மகிழ்வார்
தன்னைமறந்தனர் பனிநீரோடைசறுக் கினர்நீத்திசைவார் சந்தனவாவிகுடைந்திவைமாதர்தனத்தன என்றிரைவார்
அன்னம் பொலிகுமரிப்பதிநாயகி ஆடுகநன்னீர் ஆடுகவே அழகுதழைந்தகல் யாணசவுந்திரி ஆடுகநன்னீர் ஆடுகவே.

நீராடற்பருவமுற்றிற்று.



பத்தாவது.

## திருஊசற்பருவம்.

வேறு.

மன்னுசதுமுனைகொண்ட வச்சிரத்தூணிறீ இவண்கதிர்க்கற்றை வீசும் மாணிக்கவிட்டம் பொருத்திப் பரிந்தீன்றவாளராமணிகள் கோத்து

மின்னெழுகுவடம்விக்கி அரதநப்பொற் பாவை வியன்மணி
விளக்கமேந்த மிளிர்பதுமராகத் தபலகைமீப் புக்குபு வி
ளங்கிழைப் பைங்கேழொளி
துன்னுமரகதவல்லி ஒன்றுநின்றுடல் போற்றுடியிடைகடி
கிறுடங்கத்துத் திப்பணுமுடி பொருத்தபூமாதரசு சூடப்
புனைந்துநீண்ட
சென்னிமுடி என்னமிளிர் கந்நிநகர் அன்னைநீதிருவூசல் ஆ
டியருளே செந் திருவணங்குமெழில் அந்திருவணங்குநீ
திருவூசல் ஆடியருளே. (௯௰௧)

வேல்கெழு தடக்கை வீரியன்றனது கலாபியை விளங்கி
ழைச்செய்யாள் விருந்தையம்படலைக் கணவனைச்சீதவெ
ண்மதிக் கடவுண்மாமகனைச்
சூல்கெழுபாணி துணைவியை யாண்டுந்தேடினர் எனைத்தும்
பாசொளியாய்ச் சுடர்விடுதெய்வக் கிள்ளையே அயுதந்
தோடவிழ்கஞ்சம் வீற்றிருந்து
பால்கெழும் மந்தமாருதம் அசைக்கும் பரிசுபோற்பயப்பய
விபுதர் பாவையர் வடந்தொட்டாட் டவுங்கணிகை மாத
ரிற் பதாகைகள் எல்லாம்
சேல்கெழு குமரிப் பதிவளர் இறைவி திருவூசல் ஆடியருளே
செந்திருவணங்குமெழில் அந்திருவணங்குநீ திருவூசல்
ஆடியருளே. (௯௰௨)

வேறு.

வானந்தமேபந்தர் ஆகமதி கதிராடி ஆகமலிவுறுதாரகைமற்
றுமப்பந்தரிற் புஞ்சமாகத் தூணம் ஆக ஆகடவரிசைகள்

6709.



ஈனந்தம் இல்லாத அருள்விட்டம் ஆகமினிர்சதுர்மறை வடங்களாகச் சத்தியர்கள் தாதியர்கள் ஆகஅரிபிரமர்தலை தாங்கிநின்றேத்தும் ஒண்சீர்
மோனந்தம் ஆசனம தாயூசல் ஆடுமுழு முதல்விமறைவல்லி புதல்வி முக்கணர்க் குறுகாமவல்லி கன்னித்தலம் முளைத் தமெசம் பவளவல்லி
ஆனந்த வல்லிதிரு அபிடேகவல்லியினிதாடியருள் பொன்னூசலே ஆணிக்குவில்லிதொழும் மாணிக்கவல்லிநீ ஆடியருள் பொன்னூசலே. (கூ௰௩)

விஞ்ஞானகதிரொளிபுகாதடரும் ஆவரணம் மேலிட்டபந்தராகவிளங்குதுவிதாசாரம் இருதூணமாக அபிமானமொருவிட்டமாகப்
பொஞ்ஞானவிடயகோடிகளாய் முத்தூடுபோயுற்ற ஆசைவடமாய்ப் பூட்டியே பெண்மயற்பலகையிற் புக்குப்பொருந்தி உயிர்நிரைகள் எல்லாம்
எஞ்ஞான்றும் ஆசைவருதெண்கணன்மிருந்துபதம் ஏறிநின்றாசலாடும் என்பர்நீ வினைவழி அசைத்திடாயெனிலேதும் இல்லைபிது வாய்மைகண்டாய்
அஞ்ஞானதிமிரமற ஒளிசெயிளம் இரவிநீ ஆடியருள்பொன்னூசலே ஆணிக்குவில்லிதொழும் மாணிக்கவல்லிநீ ஆடியருள் பொன்னூசலே. (கூ௰௪)

வேறு.

மஞ்சுறழ்சோலைப்புதுமலர்முழுதும் வானுறழ்கற்பகமலராகும் வழிகருபாலும் விபுதர்கள் சுரபியின்மடுவினில் நின்றிழ்வதுபோலும்

விஞ்சுறுகைலைச் சாரலின் உலவியமிருக மதஞ்சாலுங்கல
வை விளிகின்றுழியினும் நன்றிமைபமறவா மேலோர்சூழ
ந்திருநகரில்
வஞ்சியர் வேந்துசெயுந்தவமகிமையில்வந்துபரிந்துவதிந்த
னளால்வஞ்சியருக்கரசென்றுதயாசலம் ஏறுபுதோறும்
வாலொளியோன்
அஞ்சலிசெய்குமரிப்பதிநாயகி ஆடுகஊசல் ஆடுகவேஅகமு
கம்உடையவர்முகமுகம்உடையவள்ஆடுகஊசல்ஆடுகவே.

வேறு.

முகிலாண்டபுவியாடரங்காக ஐம்பொறிகள்முழவாக மூட
மதிசேர் முன்னைவினை நட்டுவர்கள் ஆகமாயாகபட நாட
கம் முடிப்பதறியார்
நகிலாண்ட பெட்பேகமேபரிசிலாய்ச்சிவர் நகுகுரங்காட்
டம் இடுவார் நாமுமினிஇத்துக்கநடமொழிய ஆனந்த நட
மொன்றியற்ற என்றே
துகிலாண்டுவந்தமால் ஆதியர்களியாவருந்துதிசெய்துநின்றி
டவுமீர்த் தொந்தனைத்தொந்தமென்றுடிடும்படிமிகத் தொ
ந்தரவுசெய்துமற்றவ்
அகிலாண்டரோடும்வாதாடிநடம் ஆடுநீ ஆடியருள்திருவூச
லே அன்னநடைமின்னரசி என்னவருகன்னிநீ ஆடியருள்
திருவூசலே. (கூ௬)

வேறு.

சாமளமே கந்துயிலும் மண்டபத்தே
தண்பவளக் கால்நான்கு நிறுத்திநாப்பண்

ஓமளவும் வயிரவிட்டம் இணைந்துச்செகேழ்
ஒண்கனகவடம்பூண்ட பலகைமீதில்
ஆமளவும்மறைதுதிப்ப வாணிமாதும்
ஆரணங்கும் நின்றபலில் வடந்தொட்டாட்டக்
கோமளஞ்சேர் கன்னியரே ஆடிரூசல்
குமரிக் கோதையரே ஆடிரூசல். (கஎ)

நிலவுமிழும் அரவின்மணிச் சுடிகைஆட
நெருங்குமணிக் கலனுடைக் குழைகளாட
உலவுமதர் விழிமாதர் நடனமாட
உம்பரெல்லா மகிழ்ந்துவகைக் கடல்நின்றாடப்
பலவுமியந் தொனியாடப் பல்லாண்டோதை
பரந்துலகங் கொண்டாடப் பதாகைஆடக்
குலவுமெழிற் கன்னியரே ஆடிரூசல்
குமரிநகர்க் கோதையரே ஆடிரூசல். (கஅ)

பொருதுவினை கடந்துய்யும்படிக்குஞானப்
பொருள்தருவீர் அருள்தருவீர் ஆடிரூசல்
எருதுநடத்திய பெருமான் அடியர்தம்பால்
இரக்கம் வைத்தின் புதவுறுவீர் ஆடிரூசல்
வருதுயரம் எமக்ககற்றி நோயில்லாத
வாழ்வுபெற வரம்புரிவீர் ஆடிரூசல்
கருதுபயன் தந்தருள்வீர் ஆடிரூசல்
கன்னிநகர்க் கன்னியரே ஆடிரூசல் (கக)

ஞாலமெல்லாம் படைத்துடையீர் ஆடீருசல்
நலஞ்செய்வள்ளைக்கொடியிடையீர் ஆடீருசல்
சீலகுணக் குன்றுள்ளீர் ஆடீருசல்
சிவஞான மன்றுள்ளீர் ஆடீருசல்
சாலஎன்னுள் ளந்தெருள்வீர் ஆடீருசல்
சந்ததிக்கின் மொழிஅருள்வீர் ஆடீருசல்
காலமெல்லாம் வாழ்ந்திருப்பீர் ஆடீருசல்
கன்னிகர்க் கன்னியரே ஆடீருசல். (ம)

முற்றிற்று.

சற்குருநாதன திருவடிகள் வாழ்க.

ஆக விருத்தம் ௱க.

---

